[5th March 1958

Sri N. K. PALANISAMI : அரசியல் தியாகிகள் எல்லாக் கட்சிகளி லும் இருப்பதால், அவர்களின் தகுதி பார்த்து காங்கிரஸ் தலைவர் கையெழுத்து போடுவதைவிட ரெவினியூ அதிகாரிகளே போடுமாறு உத்தரவிடப்படுமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இதையே ரெவினியூ அதி காரியிடம் ஒப்படைத்திருந்தால் கனம் அங்கத்தினர் ஸ்ரீ பழனிசாமி அவர்கள் பாடத்தை திரும்பிப் படித்திருப்பார் என்று நினைக்கிறேன்.

Sri K. ANBAZHAGAN : : தேசிய தியாகிகளைப் பற்றிய சான்றிதழ் வழங்குகின்ற உரிமை ஒரு கட்சித் தலைவருக்கு அளிக்கப்படுவதைவிட நாட்டிலே உள்ள, சட்ட மன்றத்திலே உள்ள, அந்தக் கட்சியைச் சார்ந்த உறுப்பினர்களுக்காவது அளிக்கப்பட்டு, சட்ட மன்றத்தோடு தொடர்புடைய தாக்கப்படுமா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : சட்ட மன்றத்திலே இருக் கின்ற உறுப்பினர்களுக்கும் இந்த இயக்கத்திற்கும் எந்த விதமான சம்பந்தமும் இல்லாமலிருக்கலாம். ஆகையால்தான், காங்கிரஸ் நடத்திய இயக்கங்களில் சேர்ந்தவர்களைப்பற்றிய விஷயங்களும், அதற்குத் தகுந்த ஆதாரங்களும் காங்கிரஸ் ஸ்தாபனத்திடம் இருக்கவேண்டு மென்ற காரணத்தால், இத்தகைய சர்டிபிகேட் வழங்கக்கூடிய உரிமை தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவருக்கு கொடுக்கப்பட்டிருக்கிறது.

Sri S. LAZAR : காங்கிரஸ் கட்சியைச் சாராத வேறு கட்சியைச் சேர்ந்த எவராவது தமிழ்நாடு காங்கிரஸ் தலைவரிடத்திலே சர்டிபிகேட் கேட்டு, கொடுக்க மறுத்ததாக ஏதாவது புகார் சர்க்காருக்கு வந்திருக் கிறதா ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இதுவரையிலும் எந்த விதமான புகாரும் வரவில்லை.

Sri A. GOVINDASAMY : தியாகிகள் பட்டியலைத் தயாரித்து தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவருக்கு அனுப்புகிற பொறுப்பை ஜில்லா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஏற்றுக்கொண்டிருக்கிறார்களா ? அப்படி யானால், சில ஜில்லாக்களில் புதியதாக வந்திருக்கிற காங்கிரஸ் கமிட்டித் தலைவருக்கு இந்த பொறுப்பை ஒப்படைத்திருப்பது எப்படி பொருத்தம் உடையதாக இருக்கும் ?

The Hon. Sri C. SUBRAMANIAM : இப்பொழுதிருக்கக்கூடிய தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவரைப் பொறுத்த வரையில், அவ ருக்கு ஜில்லாவில் இருக்கும் எல்லா விவரங்களும் தெரியும். ஆகையால், அவர் சரியான விதத்தில் சர்டிபிகேட்டுகள் வழங்குவார் என்பதில் சந்தே கத்திற்கே இடம் கிடையாது.

*Homes for Harijans*

* 201 *Q.*—Sri N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Public Works be pleased to state—

(*a*) the number of houses built for Harijans in the Coimbatore district during 1957 ; and

(*b*) the amount spent thereon?

The Hon. Sri P. KAKKAN : (*a*) 318.

(*b*) Rs. 1,74,900 (during 1956–57).

Sri N. K. PALANISAMI : ஒதுக்கியிருக்கும் வீடுகள் தொகை ஒரு ஊருக்குக் கூட போதாமல் இருக்கிறது. ஆகவே, ஜில்லா பூராவும் இருக்கும் ஹரிஜனங்களுக்கு வீடு கட்டிக் கொடுக்கக்கூடிய திட்டம் ஏதாவது சர்க்காரிடம் இருக்கிறதா ? அத்திட்டம் எத்தனை வருஷங்களில் முடிவு அடையும் ?

The Hon. Sri P. KAKKAN : ஜில்லா பூராவிலும் உள்ளவர்களுக் கெல்லாம் வீடு கட்டிக் கொடுப்பதென்றால் அது இப்பொழுது முடியாது. அங்கத்தினருக்கு முழு விவரம் வேண்டுமானால் தனியாகக் கேள்வி போடும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

5th March 1958]

SRI P. G. MANICKAM : கனம் சபாநாயகர் அவர்களே! ஒதுக்கப்பட்டிருக்கிற வீடுகளானது இந்த வருஷம் மார்ச் 31-ந் தேதிக்குள் கட்டப்பட்டுவிடுமா, அல்லது பின்னால் கட்டப்படுமா? எந்த நிலைமையில் கட்டப்படுகிறது என்று அறிய விரும்புகிறேன். 1-10 p.m.

THE HON. SRI P. KAKKAN : மார்ச் 31-ந் தேதிக்குள் கட்டிவிட வேண்டும் என்று முடிவு செய்திருக்கிறோம். அவ்வேலை மிகவும் துரிதமாக முடிக்கப்படவேண்டும் என்று எல்லாக் கலெக்டர்களுக்கும் தெரியப்படுத்தியிருக்கிறோம். முடியாவிட்டால் பின் இரண்டொரு மாதத்தில் கட்டுவதற்கும் அனுமதி அளிக்கவேண்டும் என்பதாக மத்திய சர்க்காரைக் கேட்டுக் கொண்டிருக்கிறோம்.

SRI A. GOVINDASAMY : கோவை மாவட்டத்தில் கவுந்தப்பாடி கிராமத்தில் கட்டப்பட்ட வீடுகள் இடிந்துவிட்டதாகச் சொல்லப்படுகிறது. அவை சரிப்படுத்தப்பட்டுவிட்டதா?

MR. SPEAKER : The hon. Member may put a separate question.

SRI M. JAGANNATHAN : ஹரிஜனங்களுக்குக் கட்டிக் கொடுக்கப்படும் வீடுகளுக்கு அஸ்திவாரம் இரண்டடி போடுவதற்குத்தான் எஸ்டிமேட்டில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதாக அறிகிறேன். இவ்விஷயம் உண்மைதானா?

THE HON. SRI P. KAKKAN : அஸ்திவாரம் இரண்டடி போடவேண்டும் என்பது உண்மைதான். இரண்டடி போட்டால் போதும் என்கிற இடங்களுக்கு இரண்டடி போதும். மோசமான இடங்களுக்கு இன்னும் கொஞ்சம் அதிக அஸ்திவாரம் போடலாம் என்றும் சொல்லியிருக்கிறோம்.

SRI G. G. GURUMURTHI : ஹரிஜனங்களுக்கு வீடு கட்டுவதற்காகப் போடப்பட்ட எஸ்டிமேட் மிகவும் குறைவாக இருப்பதால் வீடுகளைச் சரியாகக் கட்ட முடியவில்லை என்று சொல்லப்படுகிறது. இது அரசாங்கத்திற்கு தெரியுமா? எஸ்டிமேட் தொகையை அதிகப்படுத்தும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI P. KAKKAN : எஸ்டிமேட் தொகையை அதிகப்படுத்தும் உத்தேசம் இல்லை.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : ஒரு வீட்டுக்கு 250 ரூபாய் ஹரிஜனங்கள் கொடுக்க வேண்டுமென்று திட்டமிடப்பட்டிருக்கிறது. பொதுவாக வீடு கட்டுவதற்கு இப்போது ஒதுக்கப்பட்டிருக்கும் பணம் போதாது என்று சொல்லப்படுகிறது. அதைப்பற்றி அரசாங்கம் ஏதாவது பரிசீலனை செய்யுமா?

THE HON. SRI P. KAKKAN : அப்பேர்ப்பட்ட தகவல் ஒன்றும் இல்லை பரிசீலனை செய்வதற்கு.

SRI K. VINAYAKAM : Have the Government any scheme for building houses for really economically poor people, other than Harijans, namely, Backward Classes?

THE HON. SRI P. KAKKAN : ஹரிஜனங்களுக்காக கட்டப்படும் வீடுகளுக்கு அருகில் அவர்களும் வந்து வசிக்க விரும்பினால் வீடு கட்டிக்கொள்ள ஏற்பாடு செய்யலாம்.

SRI A. A. RASHEED : சாதாரண வீடுகள் கட்டுவதற்கு எத்தனை அடிகள் அஸ்திவாரம் போடுகிறார்கள்?

THE HON. SRI P. KAKKAN : தனிக் கேள்வி போடவேண்டும்.

[5th March 1958

SRI O. VENKATASUBBA REDDI : ஹரிஜனங்களுக்கு கட்டும் வீடுகளில் குளிக்கிற ரூம் ஒன்று இருக்கிறது. அதற்கு கிராமப்புறங்களில் அவசியம் இல்லை. இப்போது இருக்கிற வீடு சௌகரியம் இல்லையென்று சொல்கிறார்கள். அந்தப் பிளானை மாற்றி அமைப்பதற்கு ஏதாவது திட்டம் இருக்கிறதா ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் சொல்கிற யோசனை பரிசீலனை செய்யப்படும்.

SRI T. IRUSAPPAN : ஏற்கனவே கட்டப்பட்ட காலனிகளுக்கு ஹரிஜனங்களுக்கு உடனடியாகப் பணம் கட்டவேண்டுமென்று உத்தரவு வந்திருக்கிறது. அவர்கள் பணம் கட்டும் நிலைமையில் இல்லை. அவர்கள் பணம் கட்டாமல் இருப்பதற்கு ஏதாவது ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI P. KAKKAN : ஒரு காலனி கட்டுவதற்கு முன்பாகவே யார் 250 ரூபாய் பணமாகவோ, உழைப்பின் மூலமாகவோ கொடுக்கிறார்களோ அவர்களுக்கு வீடு தரப்படும் என்று சொல்லப்பட்டது. அப்போது ஒப்புக்கொண்டு இப்போது பணம் இல்லை என்றால் என்ன செய்வது ? உண்மையில் பணம் இல்லாத ஏழைகளாக இருந்தால் கலெக்டர் சிபார்சு செய்தால் 250 ரூபாய் பணம் கடனாக அவர்களுக்குக் கொடுத்து வசூலிக்கப்படும்.

SRI M. JAGANNATHAN : சேரிகளை ஒழிப்பதற்கு திட்டங்கள் போட்டுக்கொண்டிருக்கும்போது சேரிகளிலேயே ஹரிஜனங்களுக்கு வீடுகள் கட்டித்தருவது சரியா என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : சாதி இந்துக்கள் வாழக்கூடிய பகுதிகளில் சர்க்கார் நிலங்களோ, புறம்போக்கு நிலங்களோ இருந்தாலும் கூட அங்கே காலனிகளை ஏற்படுத்த நடவடிக்கை எடுக்கப்படும்.

*House-sites for Harijans*

* 202 *Q.*—SRI P. G. MANICKAM : Will the Hon. the Minister for Public Works be pleased to state the number of Harijans provided with house-sites free in the Bhavani taluk, Coimbatore district?

THE HON. SRI P. KAKKAN : The number of Harijans provided with house-sites free of cost in Bhavani taluk of Coimbatore district is eighty from July 1948. In addition to this, an extent of 11·12 acres of land has been acquired for provision of house-sites for 139 Harijan families.

SRI P. G. MANICKAM : பவானி தாலுக்காவில் 46 ஹரிஜனச் சேரியானது சாதி இந்துக்களுடைய பட்டா நிலங்களில் இருக்கிறது. அதனால் அவர்கள் சாதி இந்துக்களுக்கு அடிமை வேலை செய்கிறார்கள். அந்த நிலங்களையாவது உடனடியாக ஜாரி செய்து ஹரிஜனங்களுக்கு வழங்க நடவடிக்கை எடுக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் சொல்கிற கிராமங்களை எல்லாம் எழுத்து மூலமாக அனுப்பினால் அந்த நிலங்களை எல்லாம் அக்வயர் பண்ண ஏற்பாடு செய்ய முயற்சிக்கும்.

SRI A. GOVINDASAMY : பவானி தாலுக்காவில் வீட்டு இடம் இலவசமாக ஹரிஜனங்களுக்கு கொடுப்பதாகத் தெரிகிறது. அதே போன்று இதர இடங்களிலும் செய்வார்களா ?

THE HON. SRI P. KAKKAN : எங்கெல்லாம் ஏழை ஹரிஜனங்கள் இருக்கிறார்களோ அங்கெல்லாம் இனமாக வாங்கிக் கொடுக்க முயற்சி செய்யப்படும்.